[17th August 1960

விலைக்குக் கொடுக்கப்படவேண்டுமென்று எந்தெந்தப் பிராந்தியங்களிலுள்ள ஹரிஜன கூட்டுறவு சொஸைடிகள் சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டன?

(ஆ) எந்தெந்த ஹரிஜன சொஸைடிகளுக்கு எத்தனை ரூபாய் மதிப்புள்ள கூப்கள் வழங்கப்பட்டன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A paper [a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM: திருநெல்வேலி, மற்றும் வேறு ஒரு ஜில்லாவில் மாத்திரம் இந்தக் கூப்களைப் பெறுவதற்கு ஹரிஜன கூட்டுறவு சொஸைடிகளை ஏற்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. அதே மாதிரி ஒவ்வொரு ஜில்லாவிலும் அந்தந்த பிராந்தியங்களில் இவ்விதமான சொஸைடிகளை ஏற்படுத்தினால், அந்த இடங்களில் இந்தக் கூப்களை அந்த சொஸைடிகளுக்கு கொடுக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள அரசாங்கம் கவனிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அம்மாதிரி எந்தெந்த இடங்களில் அப்படிப்பட்ட சொஸைட்டிகளை ஏற்படுத்தி அம் மாதிரியான சொஸைட்டிகளுக்கு சலுகைகள் கேட்டால் அரசாங்கம் அதைப்பற்றி பரிசீலனை செய்யும்.

SRI P. G. MANICKAM: இந்தப் பிராந்தியத்திலுள்ள சமுதாய தேசீய அபிவிருத்தித் திட்டத்தில் இருக்கக்கூடிய அதிகாரிகள் மூலம் இதர சொசைட்டிகள் ஏற்படுத்துவதைப் பற்றி அரசங்கம் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தக் கேள்வியை எந்த இடத்தில் போட வேண்டுமோ அந்த இடத்தில் போட வேண்டும்.

SRI K. SATTANATHA KARAYALAR: இந்த ப்யூயல் கூப்களை வெட்டுவதில் "ஸ்டாக் ஆன் தி ரோட்" என்று சொல்வதுபோல் தனிப்பட ஏலத்திற்கு விடப்படுகிறதா அல்லது "எண்டயர்" அதாவது எல்லா பாரஸ்ட் ஏரியாவும் ஏலத்திற்கு விடப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பாரஸ்ட் கூப்பாக பிரித்து ஏலத்திற்கு விடப்படுகிறது.

*Cancer.*

*243 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் 1960–61-ம் வருஷம் வரைக்கும் புற்று நோய் நிவாரணத்துக்காக எவ்வளவு தொகை மானியமாக மத்திய கவர்மெண்டானது சென்னை ராஜ்யத்துக்கு வழங்கியுள்ளார்கள் ?

[a] Printed as Appendix III on Pages 384–385 infra

17th August 1960]

(ஆ) புற்று நோய் சிகிச்சையில் ஈடுபட்டுள்ள எந்தெந்த ஆராய்ச்சி நிலையங்களுக்கும் ஆஸ்பத்திரிகளுக்கும் எவ்வளவு தொகை வழங்கப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No Central grant was sanctioned to this State by the Government of India for Cancer relief work.

(b) The Cancer Institute, Adyar, Madras, has been sanctioned a total grant of Rs. 5,69,274 (both maintenance and building grants) from the State Funds during the Second Five-Year Plan period up to 31st March 1960. The Institute has received in addition Rs. 8·15 lakhs directly from the Central Government during this period.

*Short-term training course for doctors*

*244 Q.—SRI P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிராமத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக வைத்தியர்களுக்கு குறுகிய காலப் பயிற்சி முறையை துவக்குவது பற்றிய திட்டக் கமிஷனின் ஆலோசனையானது சென்னை சர்க்காருக்கு அனுப்பப்பட்டதா ?

(ஆ) அவ்வாறு அனுப்பப்பட்டிருப்பின் இத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவதற்கான பரிசிலனை ஏதாவது நம் அரசாங்கத்தாரால் நடத்தப்பட்டு வருகிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir.
(ஆ) Does not arise.

SRI P. G. MANICKAM: நமது நாட்டிலே வைத்தியர்களுடைய தேவை அதிகமாக இருப்பதனாலே நமது சர்க்காராவது இந்தக் குறுகிய கால வைத்திய பயிற்சிக்குரிய திட்டங்களை அமைக்க நடவடிக்கை எடுக்குமா? அவ்வாறு எடுப்பது பற்றி சர்க்காரால் பரிசிலனை செய்யப்பட்டு வருகிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU: குறுகிய காலத் திட்டத்தை கவுன்சில் ஒத்துக் கொள்வதில்லை. ஆகவே முழுப் பயிற்சி அளிப்பதற்குத்தான் காலேஜை அதிகப்படுத்திக்கொண்டு வருகிறோம்.

*Children's Films Committee*

*245 Q.—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னை ராஜ்யக் குழந்தைகள் படக் குழுவில் யார் யார் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள் ?